௳

ஸ்ரீ பகவத் பூஜ்யபாத

சங்கர ஜகத்குரு

அருளிச்செய்த

# விவேகசூடாமணி

## வசனம்

தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம்,
திருக்கு திருசியவிவேகம், ஹஸ்
தாமலகம், குருஸ்துதிகளுடன்

[illegible]

இவை

திருவண்ணாமலை

ஸ்ரீ ரமண மஹர்ஷியவாகளால்

அருளப்பெற்று

நான்காம் பதிப்பு

ஸ்ரீ ரமணீயவாணி புத்தகாலயத்தாரால்

பிரசுரிக்கப்பட்டது

 1926 [விலை அணா 7

சிறுமணவூர் முனிசாமி முதலியார் அண்டு ஸன்ஸ்
சிவகாமி விலாச அச்சுக்கூடம். சென்னை.



# தக்ஷிணாமூர்த்தி தோத்திரம்

## தாத்பர்யத்துடன்



### அவதாரிகை

உலக சிருஷ்டிகர்த்தரான பிரம தேவரின் மானசிக புத்திரரான சனகர், சனந்தனர், சனத்சுஜாதர், சனத்குமாரர் என்னும் நால்வரும் சகச்சிருட்டியாதி காரியங்கட்காகத் தாம் பிறப்பிக்கப்பட்டமையைப் பிதாவாற் கேட்டு அதில் விரக்தி யுற்றவராய் உபராந்நிலையையே நாடி அதனைத் தெளிவிப்பாரைத் தேடிவரும் அதி தீவிர பக்குவர்களின் பொருட்டுப் பரம காருணிகனான சாக்ஷாத் பரமேசுவரன் ஆலின் கீழ் **தக்ஷிணா மூர்த்தமாக** மௌனமாய்த் தன்னிலையிற் சின்முத்திரையோடிருக்கக் கண்டு ஏமகாந்தங் கண்ட இரும்புபோற் கவரப்பட்டவராய் அவ்வாறே பவாருகிற் றம் முண்மை நிலையி லமர்ந்தனர். அம்மௌனமாந் தன்னிலை யுண்மையை யுணருஞ் சக்தியில்லா வுத்தம வதிகாரிகட்குத் தடையாய்க் காணப்படு முலகமாய், காண்பானாய், காட்டு மொளியாய் விரிந்தோங்குஞ் சக்தி தன்னையன்றி யின்மையின் 'எல்லாந் தன்மய' மென்னுஞ் சர்வாத்மத்துவத்தைத் தொகுத்து இத்தோத்திரத்தால் ஆசாரிய சங்கரர் அறிவிக்கலாயினர்:—

மன்னுமா முனிவர் சாந்தி மன்னவே
தென்முக மூர்த்தியாய்த் திகழ்ந்து மோனமாந்
தன்னிலே திகழ்த்தியத் துதியிற் றன்மயஞ்
சொன்னவச் சங்கரன் றன்னு மென்னுளே.

---

## நூல்

### அறுசீராசிரிய விருத்தம்

மவுனமா முறையாற் காட்டு மாப்பிரம வத்து வாலன்
சிவநிலைத் தவர்சற் சீடர் செற்குரு வரன்சிற் கைய
னுவகையோ ருருவன் றன்னு ளுவப்பவன் களிமுகத்த
னவனையாந் தென்பால் மூர்த்தி யப்பனை யேத்து வோமே.

(தாத்பர்யம்.) மௌனமாகிற வியாக்யானத்தாற் றெரிவித்த பரப்பிரம ஸொரூபனுடைய பாலனும், பிரம நிஷ்ட முனிகளான உத்தம சிஷ்யர்கள் சூழ விருக்கும் குரு சிரேஷ்டனும், சின்முத்திரை கையனும், ஆனந்த மூர்த்தியும், தன்னிலேயே ரமிப்பவனும், சந்தோஷ முகனும், ஆகிய பரம பிதாவான அந்த தக்ஷிணாமூர்த்தியை நாம் துதிப்போம்.

உலகுகண் ணாடி யூர்நே ருருத்தனு ளஞ்ஞா னத்தால
வெளியினிற் றுயிற்க னப்போல் விளங்கிடக் கண்டு ஞான
நிலையுறு நேரந் தன்னை யொருவனே யவனோர் காண்பன்
றலையுறு குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி. 2

(தா-ம்.) உலகமானது கண்ணாடியிற் காணப்படும் பட்டணம்போலத் தனக்குள்ளாகவே யிருந்தும் தன் அறியாமையால் நித்திரையால் கனவுபோல வெளியிலிருப்பதாகப்

பலதுளைக் குடத்துட் [illegible]க்கதிர் போலயார் ஞானம்
விழிமுதற் பொறிவாய்ப் பாய்ந்து வெளிசரித் தறிந்தேனென்ன
விளங்கிடு மெவனைச் சார்ந்து விளங்குமிவ் வவனி யாவுஞ்
சலமறு குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி. 5

(தா-ம.) அநேக துவாரமுள்ள குடத்தினுள்ளிருக்கும் தீபப்பிரகாசம் போல எவனது ஞானம் கண் முதலான இந்திரிய வழியாய் வெளிப்பட்டு வீசுகிற, 'நான் அறிகிறேன்' என்பதாக ஸ்வயம்பிரகாசனை எவனை அனுசரித்தே இந்த ஜகமெல்லாம் பிரகாசிக்கின்றதோ, அந்த சலனமில்லாத தக்ஷிணாமூர்த்தி குருவுக்கு நமஸ்காரம்.

உடலுயிர் பொறிகள் புத்தி யெனவுயா புகமாத் தேர்வா
மடந்தையர் பாலரந்தர் மடையர்போய் மூட வாதி
மடமையால் விளையுமம்மா மயக்கமே மாய்க்கு ஞானத்
தடையறு குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி. 6

(தா-ம.) தேகம், பிராணன். இந்திரியங்கள், புத்தி, இவை யொடுங்கின சூன்யம், இவற்றையே தானாக பெண்டுகள், குழந்தைகள், குருடர், ஜடர் போல வுணரும் மூடவாதிகளது உண்மை அறிவின்மையா லுண்டான அப்பெரு மயக்கத்தைப் போக்கும் மயக்கமில் ஞான குருவான அந்த தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

இராகுபற் றிரவி திங்க ளெனவுடன் மாயை மூடப்
பராவுள மொடுங்கத் தூங்கிப் பரவிட வுணருங் காலம்
புராவுறங் கினனு னென்று போதனு மெவன்பு மானுய்ச்
சராசர குருவா மந்த தக்ஷிணா மூர்த்தி போற்றி. 7

(தா-ம.) ராகுவால் பிடிபட்ட சூரிய, சந்திரர் போல் எல்லோருமே முன்னால் எவன் மாயையின் மறைப்பால் புருடர் (ஜீவர்) ஆய், விரிந்த மனமொடுங்கியபோது தூங்கி, மனம் விரிந்து விழிக்கும்போது முன் தூங்கினேனென்று தனது இருப்பை உணர்கின்றனரோ, அந்த சராசர சற்குருவான தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

குழவிமுன் னனைவு முனனுக் கடந்த வைந்தை யெல்லாஞ்
சுழலினுங் கலந்திருந்தே சொலிக நமுள னாகமா னாளுங்
கழல்விழ வோர்க்கார் தன்னைக் காட்டுவன் சிறகு திப்பாற்
றழல்விழிக் குருவா மந்தத் தக்ஷிணாமூர்த்தி போற்றி. 8

(தா-ம.) குழந்தைப்பருவ முதலனவும், நனவு முதலனவும், மற்றும் எல்லா அவஸ்தைகளும் மாறி மாறி வரினும் மாறாமல் கலந்திருந்து உள்ளே 'நான்' எனப்படுவதாக எப்போதும் பிரகாசிக்கும் தன்னை, சரணமடைந்தவர்கட்கு சின்முத்திரையால் எவனொருவன் விளக்குகின்றானோ, ஞானாக்னி நேத்திரனான அந்த தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

உலகையா ரியபு மாதேனக் குழுமால நனக்க னவிற்
கலங்கியே மாயை பாலே காரிய காரணமயின்
றலைவனுந் தாசன் சீடன் குருமகன் றந்தை யாதி
தலைமுறை குருவா மந்தத் தக்ஷிணாமூர்த்தி போற்றி. 9

(தா-ம.) உலகத்தை காரியம், காரணம், தலைவன் (உரியவன்), தாஸன் (உரிமை), சீடன், குரு, மகன், பிதா முதலிய பேதங்களாக மாயையால் மயங்கி நனவிலும், கனவிலும் காண்கின்ற இப்புருடனெவனோ உலக குருவான அந்த தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

உ

பரப்பிரஹ்மணேநம:



# விவேக சூடாமணி



## அவதாரிகை

உலகத்தில் எல்லா ஜீவர்களுடைய துக்கமென்பதின்றி எப்போதும் சுகமாயிருக்கவேண்டுமென்றே, தன் சுபாவமல்லாத சோகாதிகளை நீக்கி எப்பொழுதும் சுகமாயிருக்க வேண்டுமென்பதுபோலக் கோருதலையும், யாவர்க்கும் தன்னிடத்திலேயே அத்தியந்தம் பிரீதியிருப்பதாலும், பிரியம் சுகத்திலன்றியுண்டாகாததாலும், நித்திரையில் ஒன்றுமின்றியே சுகமாயிருக்கு மனுபவத்தாலும் சுகமென்பது தானாகவே யிருக்க, தன்னையறியாத அஞ்ஞானத்தாலேயே அபார சம்சாரத்திலுழன்று, சுகந்தரும் மார்க்கம்விட்டு, இகபர போகமடைதலே சுகவழியெனப் பிரவிருத்திக்கின்றனர். ஆனால் துக்கமற்ற சுகங்கிடைக்கிறதில்லை. இதன் நேர்வழி காட்டவே சாக்ஷாத் ஸ்ரீ சங்கரர் சங்கர வேஷம்பூண்டு இச்சுகத்தின் பெருமையைக் கீர்த்திக்கும் வேதாந்தத்தின்

பிரஸ்தானத் திரயத்திற்கும் பாஷ்யமெழுதி வழிகாட்டி நடந்துங் காட்டினர். அவற்றைப் பார்த்தறிவி லசமர்த்தராய் அதி தீவிர சுமேச்சுக்களான முமுக்ஷுக்களெந்த கவலை பயன் படாமையின் அவற்றினந்தரங்கத்தை இந்த விவேகசூடா மணிக் கிரந்தத்தால் வெளிப்படுத்தி முமுக்ஷுக்களுக்கு வேண்டிய விஷயங்களை விஸ்தாரமாய்க் கூறி மோக்ஷமார்க்கங் காட்டியிருக்கின்றனர்.

இதில், மனுஷ்ய ஜன்மங் கிடைப்பது துர்லபமென்றும், அதனால் தன் சுபாவ மோக்ஷானந்த மடையப் பிர யத்தனம் செய்யவேண்டுமென்றும், ஞானத்தாலேயே மோக்ஷமென்றும், ஞானம் விசாரத்தாலேயே வருமென் றும். அதற்கு குருவை யடையவேண்டுமென்று குரு லக்ஷணம், சிஷ்ய லக்ஷணம். குரு சேவையையுங் கூறிப் பின்னும், சுகமடையத் தன் பிரயத்தனமே முக்கியமென் றும், வாங்மாத்திர ஞானத்தால் சுகங் கிடையாதென்றும், சிரவணாதி விசாரமே மோக்ஷசாதனமென்று மாரம்பித்து, சரீரத் திரயமும் அனாத்மா, அசத்தியம்; 'அகம்' எனும் ஆத்மா அவைகட்கு விலக்ஷணம். அனாத்மாவில் ஆத்ம புத்தி பந்தம், அஞ்ஞானத்தால் வந்தது, ஞானத்தால் நாசமாம் என்று சிரவணத்தையும்; நானார்? என அகத்தில் செய்யும் சூக்ஷ்ம விசாரத்தால் அச்சரீரத்திரயமான பஞ்ச கோசங் களையும் நானன்றெனத் தள்ளி இவைகட்கு விலக்ஷணமாய், ஏகமாய், ஹிருதயத்தில் 'அஹம்' எனத்திகழும் த்வம் பதார்த்தமான ஆத்மாவை, முஞ்சம் புல்லினுள்ளாணி யைப் போலப் பிரித்துக்காணும் மனனத்தையும்; 'தத்' பத உபாதியான நாம ரூபப் பிரபஞ்சம் பிரஹ்ம மாத்ர

மென அவ்வுபாதி நீக்கத்தையும்: 'தத்' பதார்த்தத்தை யும்; அவ்விரு பதார்த்தங்களான ஆத்ம பர ஐக்கியத்தைத் தெரிவிக்கும் "தத்துவமஸி" மஹா வாக்கிய உபதேசத்தையும்; இந்த 'அகம் பிரஹ்ம' மாயிருக்க வேண்டு மென்பதையும்; அங்ஙனமிருக்கினும் பூர்வ வாசனைகள் அதிதிடமா யுதித்துத் தடை செய்யுமென்று, வாசனாத் திரயம், மூலமான அகங்கார வாசனை இதன் விருத்திக் கேது வான பேதபாஹ்ய வாசனை, இவற்றிற் கேதுவான விக்ஷேப ஆவரண சக்திகளையும்: இவை நீங்கும்வரை மனதை யிதயத்திருத்தி நிரந்தரம் பிரமாதமின்றிச் செய்யும் 'அஹம் பிரஹ்மம்', 'பிரஹ்மமே அஹம்' என்னும் சஜாதீய சத்திய ஆன்மாகார விருத்தியைக் கிளப்புதலாகிய பக்தி, யோகம், தியான மென்னப்பட்ட ஆத்மானு சந்தானமாகிற நிதித்யாசனத்தையும்: இங்ஙனம் ஹிருதயத்தில் மனம் எனும் மத்தை நட்டு, அரணி, தயிரிவற்றில் அக்கினி வெண் ணெய்களை வெளிப் படுத்துவதுபோலப் பிரமாத மின்றித் தைலதாரைபோல் நிரந்தரம் செய்யும் பிரஹ்மாப்யாச மதன பலத்தா லாவிர்ப்பவிக்கும் சஹஜ நிர்விகற்ப சமாதியால் பிரயத்தன மின்றியே அகம் புறமெங்கும் எல்லாக் கால மும் ஏகமாய்ப் பிரகாசிக்கும் அப்பிரதிபந்த அபரோக்ஷப் பிரஹ்ம சாக்ஷாத்கார ஞானானுபவம் ஸித்தியாகும். அதனால் அஞ்ஞான வாசனா ஹிருதயக் கிரந்தியும், ஸம்சயங்களும், கர்மங்களும் நாசமடையும். அகண்டானந்த முக்தி சித்தி யாம். என்று சாதனத்தோடு சமாதியையும்; இதில் பேத விகற்பங்க ளொன்றுமில்லை யென்பதையும்; இதனை யடை தலே புருஷார்த்தம்; இதனை யடைந்தவனே ஜீவன் முக்

தன்; பரோக்ஷ ஞானியன்று என்று ஜீவன் முக்தன் லக்ஷணம், அவனது கர்மத்திரய நிவிருத்தி. இந்நிலையடைந்த சிஷ்யனது ஸ்வானுபவம். ஜீவன் முக்தனது யதேச்சா சரணம், அவனடையும் விதேக கைவல்யம், புனராவிருத்தியின்மை என்பவற்றால் இருவித முக்தியான சாக்ஷாத்காரத்தையும்; இவற்றை யனுசரித்த அனேக விஷயங்களையும் குரு சிஷ்ய சம்வாதமாய்க் கூறியிருக்கின்றனர். இஃது பிரஹ்மஸ்ரீ பிக்ஷு சாஸ்திரிகளால் தமிழ்க்கவிகளாக முன்னமே மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. நானு வர்ணந் தோடனேக நயங்களாகச் செய்து வைத்திருக்கிறார். ஒரே மிட்டாயில் அவரவர்க் கிஷ்டமானதை வாங்கிக் குணதோஷமாராயாதுண்டு அவ்வாறே மிட்டாயின ரசந்த விவேகிகளனுபவித்து சுகிக்கின்றனரல்லவா!

## நூல்

### குரு ஸ்துதி

அகமெனு மூல வவித்தை யகன்றிட
வகமக மாக வல்லும் பகலற
வகமொளி ராத்ம தேவன் பதத்தினி
லகமகிழ் வாக வனிசம் ரமிக்கவே.

அதி தீவிர மோக்ஷாதிகாரிகள் கஷ்டப்படாமல் சுலபமாகத் தானே யறிந்து அமிர்தத்வத்தை யடையத் தயையினால் வேதாந்தார்த்தங்களின் ஹிருதயத்தை விஸ்தாரமா யிவ்விவேக சூடாமணி கிரந்தத்தால் வெளிப்படுத்தி சிவ சொரூபமாய்ப் பிரகாசிக்கும் ஜகத் குரு ஸ்ரீமத் சங்கரபகவத்

பாத ஸாரா விந்தங்களிலென் றிருதயாரவிந்தத்தை யென்றும் ஸமர்ப்பிக்கின்றேன்.

ஸகல வேதாந்த ஸித்தாந்தத்திற்கே கோசரராயும் இதரப் பிரமாணங்களா லறியப்படாதவராயும் விளங்கும் பரமானந்தமய ஸ்ரீ கோவிந்த சத்குருவுக்கு நமஸ்காரம்.

---

ஜீவர்களுக்கு மனுஷ்ய ஜன்மங் கிடைப்பதே வெகு துர்லபம். அதில் புருஷனாய்ப் பிறத்தலும், அதிலும் பிராமணனாதலும். அதனில் வேதமோதும் வைதிக தர்ம மார்க்கத்தில் நடத்தலும், அதனிலும் வித்வானாதலும், அதனில், அநாத்மாத்ம விசாரம் பிறத்தலும், அதனிலும் ஸ்வாநுபவ ஞான மடைதலும் மிகவருமை. அந்த ஞானத்தால் பிரஹ்மாகாரமாக விருக்கும் மோக்ஷமானது அனந்த கோடி ஜன்மாந்தரங்களில் செய்த சுகிர்தங்களா லன்றிக் கிடையாது. இவை யெல்லாவற்றையுங் கிரமமா யடையா விடினும் ஈசுவரானுக்கிரக காரணமாய் அருமையான மனுஷ்யத்வம், முமுக்ஷுத்வம், மஹாத்மாக்களின் சங்கம் என்னும் இம்மூன்று கிடைக்கின் மோக்ஷமடைய இதுவே போதும்.

எத்தவத்தாலோ! கிடைத்தற்கரிய மனுஷ்ய தேகம் பெற்று சுருதியின் அர்த்தங்களை யறிவதற்கேதுவான புருஷத்துவ மடைந்தும் அசத்தான தேகாதிகளி லபிமானத்தால் தன்மயமான சாசுவத மோக்ஷத்தை யடைதற்கு எத்தனஞ் செய்யாதவன் ஆத்ம ஹத்தி (தற்கொலை) செய்தவனாவான். தன்னிதத்தை நாடாத அவனிலும் மூடாத்மா எவனிருக்கின்றனன்.

சாஸ்திரங்கள் படித்தாலும், தேவபூஜை பண்ணினுலும், கர்மங்கள் அனுஷ்டித்தாலும், தேவதைகளை யுபாசித்தாலும், இன்னுமென்ன செய்தாலும் பிரஹ்மாத்மைக்ய ஞானத்தாலன்றி பத்தனைகோடி கற்பங்களாயினும் முக்தி சித்தியாது. 'தனத்தினுல் (தனத்தால் செய்யப்படுங் கர்மத்தால்) மோக்ஷ ஆசையே யில்லை' என்னுஞ் சுருதி கர்மங்கள் மோக்ஷ காரணமன்று என்று தெளிவுபடக் கூறியிருத்தலால் மோக்ஷமடைய விச்சிக்கும் தீரன் பாகிய விஷய சுகங்களிலாசையை முற்றுந் துறந்து மகாத்மாவாய் சாந்தராயுள்ள ஸத்குருவை யடைந்து அவருபதேசித்த பொருளில் மனதை நிறுத்திச் சந்ததம் தியானிக்கும் யோகத்தாலடைந்த அனுபவ ஞான நிஷ்டையாகும் கப்பலால் சம்சார சமுத்திரத்தில் மூழ்கிக் கிடக்குந் தன்னைத் தானே மோக்ஷமாகின்ற கரையின்மேல் ஏற்றிக் கொள்ளவேண்டும். ஆதலால் மதிய சாமியாயுள்ளவன் தார, புத்திர, தனமென்னு மீஷணத்திரயத்தையுந் நீக்கி, கர்மங்களனைத்தையுந் தூரத் தள்ளி ஜனன மரண ரூபமான பந்தம் நீங்கி மோக்ஷமடைதற்கே பிரயத்தனம் பண்ணவேண்டும். கர்மங்கள் சித்த சுத்திக்காக ஏற்பட்டனவேயன்றி வஸ்து லாபமளிப்பதற்கன்று. வஸ்து ஞானம் விசாரத்தால் வருமேயன்றிக் கோடி கர்மங்களாலும் சித்திக்காது. ரஜ்ஜுவில் ஸர்ப்பத்தைக் கண்டு பிரமித்தோனுக்கு அப்பிராந்தியா லுண்டான ஸர்ப்ப பயத்தையும், அதனுல் வந்த துன்பத்தையும் நிவிருத்திக்கும்படியான 'இது ரஜ்ஜுதான்' என்னும் ரஜ்ஜுஞானம் எங்ஙனம், அறிந்த ஆப்தன் சொல்லினுலும், தன்னுய் விசாரித்தலாலும் வருகின்றதோ மற்ற எதனுலும் வரவில்

லேயோ, அங்ஙனமே குரு உபதேசத்தாலும் வஸ்து விசாரத்தாலும் பிரஹ்ம ஞானம் வரவேண்டுமே யன்றி ஸ்நான, தான, பிராணாயாமாதிகளால் நூறுக்காலும் அவ் வஸ்துவை யுணர்தல் கூடாது. ஆதலால் ஆத்ம வஸ்துவை யறிய வேண்டிய முமுக்ஷு நிராசை யுற்று பிரஹ்மவித்தாய், கிருபா சாகரராயுள்ள உத்தம குருவை யடைந்து ஆத்ம விசாரமே செய்யவேண்டும். முக்கியமாய் விசாரத்தாலேயே அதிகாரிக்கு ஞான சித்தி யுண்டாம். தேசம், காலம், ஈசுவரானுக் கிரக மிவை ஞானம் பெற ஸஹாயமாம்.

மேதாவியாய், சாரத்தைக் கிரகித்து அசாரத்தைத் தள்ளக்கூடிய சாமர்த்தியமுள்ளவனாய், சாஸ்திரங்களில் கூறியுள்ள லக்ஷணங்கள் யாவும் நன்றாக அமையப் பெற்றவனே ஆத்ம விசாரத்தில் அதிகாரி யாவன். என்னை? விவேகியாய், விரக்தனாய், சமதமாதி ஷட்க சம்பன்னனாய் தீவிர முமுக்ஷுவாயுள்ள சாதனரான அவ்வதிகாரிக்கே பிரஹ்ம விசாரம் செய்ய யோக்கியதை யுண்டாகும். சாதனங்கள்: (1) நித்தியா நித்திய வஸ்து விவேகம், (2) இஹாமுத்திரார்த்த பலபோக விராகம், (3) சமாதி ஷட்க சம்பத்தி, (4) முமுக்ஷுத்வம் என நான்கு விதமாக மகான்களால் சொல்லப் பட்டிருக்கின்றன. அவ்வதிகாரிக் கில்லாவிட்டால் பிரஹ்ம நிஷ்டை கைகூடமன்றி யின்றேல் சித்தியாது. இவற்றுள்: (1) பிரஹ்மமே சத்தியம்; ஜகத்து மித்யை யென்னும் நிச்சயமே நித்யா நித்ய வஸ்து விவேகம். (2) தேகாதி பிரஹ்மா பரியந்தமுள்ள அநித்திய போக்கிய வஸ்துக்களின் அநித்தியத்தைப் பரோக்ஷ ப்ரத்தியக்ஷமாய்ப் பார்ப்பதாலும், சாஸ்திரங்களால் கேட்பதாலும் அவைகளி லுண்டாகும்

வைராக்கியமே இஹாமுத்ரார்த்த பலபோக விராகம். (3) க. விஷயங்களிலுள்ள தோஷங்களை யடிக்கடி நினைத்துப் பார்த்தலால் அவைகளில் விரக்தி யடைந்து மனமானது தன் லக்ஷ்யத்தில் நிருத்தமாவது சமம்: உ. விஷயங்களிற் செல்லும் ஞான, கர்ம இந்திரியங்களைத் திருப்பி அதனதன் கோளக (ஸ்தான) த்திலேயே யிருக்கச் செய்வது தமம்: ௩. மனது பூர்வ வாசனையால் பண்டு பழகிய விஷயங்களை நினையாது தன் லக்ஷ்யத்திலேயே ஸ்திரமாய் நிறுத்தி இதர கர்மங்களை விட்டுவிடல் உபரதி: ச. எவ்வளவு துக்கங்கள் வரினும் தடைசெய்யாமலும், அவற்றிற்காக ஏங்கி யழாமலும் தைரியத்தோ டவைகளை சகித்தல் திதிக்ஷை: ரு. வேதாந்த சாஸ்திரமும் குருவாக்கியமும் சத்தியம் எனக் கொள்ளும் நிச்சயம் பிரஹ்ம சாக்ஷாத்காரத்திற் கேதுவான சிரத்தை; கா. சர்வ யத்தனங்களாலும் சஞ்சல ஸ்வபாவமாயுள்ள சித்தத்தை, பரிசுத்த பிரஹ்மத்திலேயே ஸ்திரமா யிருத்துதல் சமாதானம். அஃதன்றி மனம்போனபடி போகவிடுதல் ஸமாதானமாகா தன்று. இவ்வாறுங் கூடி சமாதி ஷட்க சம்பத்தி யென்னப்படும். (4) அஞ்ஞானத்தால் வந்த அகங்காராதி தேகாந்தமாயுள்ள பந்தத்தை ஸ்வாத்ம ஞானத்தால் தொலைப்பதற்குள்ள இச்சையே முமுக்ஷுத்துவம். அம்முமுக்ஷுத்துவம் மந்தம் மத்திமமா யிருந்தாலும் வைராக்கியத்தாலும் சமதமாதிகளாலும், குரு வனுக்கிரகத்தாலும் கிரமமாய் வளர்ந்து பருவமுற்றுக் காலாந்தரத்தில் பலனைக் கொடுக்கும். வைராக்கியத்தோடுங் கூடின முமுக்ஷுத்வம் எவனிடத்தில் தீவிரமா யிருக்கின்றதோ, அவனிடத்திற்கூடிய சமதமாதி சம்பத்திலேயே பலனைத்தரும். ஆனால்

எவனிடத்தில் மந்தமாயிருக்கின்றதோ அவனிடத்தில் சமதமாதி மருபூமியில் ஜலம்போல ஆபாசமாகவே பொருந்தும்.

மோக்ஷமடைதற்கேதுவாயுள்ள சாமக்கிரி (சாதனங்)களில் பக்தியே மிகவும் சிரேஷ்டம். ஸ்வ (ஆத்ம) ஸ்வரூபத்தின் அனுசந்தானமே பக்தி என்று மகாத்மாக்கள் சொல்லுகின்றனர்.

முன் சொன்ன சாதனங்களையுடையவனும் ஆத்ம தத்துவமடைய விரும்பும் அதிகாரி, தன்னை யாசிரயித்தவர் பவ பந்தத்தை நிவிர்த்திப்பவராய், பிரகஞானவந்தராய், சர்வமும் அறிந்தவராய், நிர்மலராய், காமத்தை வென்றவராய், பிரஹ்மவித் சிரேஷ்டராய், விறகற்ற அக்கினிபோலப் பிரஹ்மத்தில் விச்ராந்தி யடைந்தவராய், எக்காரணமுமின்றியே கிருபாசாகரராய், தன்னை அடுத்த சாதுக்களுக்குப் பரம பந்துவாய் உள்ள சத்குருவை யடைந்து அன்போடு நமஸ்கரித்துப் பணிவோடு செய்து வந்த நானாவித சிசுருஷைகளால் பிரசன்னரான (சந்தோஷமுற்ற) குருவிடம் தானறிய வேண்டுவதை வினவலுற்றான்:—"ஸ்வாமின்! தீனபந்தோ! நமஸ்காரம். பயங்கரமான பவசாகரத்தில் வீழ்ந்து தவிக்கும் என்னைத் தங்கள் கருணைகடாக்ஷமாகிய கப்பலால் கரையேற்றி வைக்க வேண்டுகின்றேன். கருணைவாரிதே! துர்திருஷ்ட (பாப)க்காற்றால் வற்றித் தப்பிப்போக வழியின்றிச் சூழ்ந்தெரியும் சம்சார தாவாக்கினி (காட்டுத்தீ)யால் தபிக்கப்பட்ட என்னைக் காருண்யாமிருத வர்ஷத்தால் சாந்தப்படுத்தத் தங்களைப் பன்முறை பிரார்த்திக்கின்றேன். சாந்தராய், மகாத்மாக்களாய், வசந்த காலம்போல லோகத்திற்கு ஹிதமே செய்யப்பட்ட

வர்களாய், பவசாகர பயத்தைக் கடந்து மற்றவர் பயத்தையும் நீக்கி வைப்பவரா யிருக்கும் தங்களை யொத்த ஸாதுக்களுக்கு சூரியனது உஷ்ண கிரணத்தால் தபிக்கப்பட்ட ஜகத்தைச் சந்திரன் சீதள கிரணத்தால் தானே ரக்ஷிக்கின்றதுபோலப் பவத்திற்கஞ்சிச் சரணாகதரான எம்போலிகளை நிர்ஹேதுகமாய்க் காத்து ரக்ஷித்தல் ஸ்வபாவமே யாதலால் சம்சார தாபத்தால் பீதி யடைந்து வேறு கதியின்றி தீனனாய்ச் சரணாகதனான என்னையும், இஜ்ஜனன மரண ஸம்சாரத்தினின்றும் ரக்ஷிக்கத் தங்களுக்கே பாரம். ஸ்வாமீ! பவதுக்க மென்னுங் காட்டுத்தீச் சுவாலைகளால் தாபமடைந்த என்னை, பிரஹ்மானந்தானுபூதியால் பரம சீதளமாய், பரிசுத்தமான தங்கள் முகமென்னுங் கலசத்தினின்று வெளிப்படும் வாக்கியமாகின்ற அமிருத தாரையால் சீக்கிரம் நனைப்பீர்களாக. தங்கள் கடாக்ஷ வீக்ஷண்ய லேசத்துக்குப் பாத்திரராய் ஸ்வீகரிக்கப்பட்டவர்கள் தன்னியர்களன்றோ? இப் பவசாகரத்தை யெப்படி நான் கடப்பேனோ? இதற்கென்ன உபாயம்? எனக்கென்னதான் கதி? ஒன்றுந் தெரிய வில்லை. தாங்கள் தான் இந்த ஸம்சார துக்கத்தை யகற்றி ரக்ஷிக்கவேண்டும்.” ஸம்சார தாவானலத் துக்கமுற்று இவ்வாறு பிரலாபித்து, தன்னை விரும்பி சரணம் பிராபித்தவனாய்ச் சொன்னபடி செய்யும் சாந்த சித்தனான சிஷ்யனை பிரஹ்ம ஞானியாயுள்ள ஆசாரியர் கருணை நிறைந்த சீதள திருஷ்டியால் வீக்ஷித்து அபயந் தந்து தயையினாற் றானே தத்துவோபதேசஞ் செய்கின்றார்:—

“வித்வானான சிஷ்யனே! பயப்படாதே. இனியுனக் கபாயமே யில்லை. அபாரமாய், பயங்கரமாயுள்ள சமு

தனயன், கிருத கிருத்தியன், உன் குல முன்னால் பவித்திர மாயிற்று. பிதாவின் ருணத்தை (கடனை) நீக்கப் புத்திராதி பந்துக்களுண்டு. அங்ஙனமே ஒருவனுக்குத் தலைபாரத்தா லுண்டான சிரமத்தை நிவிருத்திக்க அன்னியரிருக்கின்றனர். ஆனால் தனக்குப் பசியாதியால் வந்த துக்கத்தைப் புசித்தலாலேயே அங்ஙனம் தானே யகற்ற வேண்டுமோ, மற்றவரால் கூடாதோ, தனக்கு வந்த வியாதியைத் தானே மருந்துண்டு பத்தியமிருந்து போக்க வேண்டுமன்றி மற்றோ ரனுஷ்டிக்குங் கர்மங்களால் நீங்காதோ அங்ஙனமே தன்னஞ்ஞானத்தால் வந்த பந்தத்தைத் தன் முயற்சியால் நீக்க வேண்டுமன்றி. அனேக கோடி கல்பங்களாயினும் அவித்யா காம கர்மாதி ரூபமான பாச பந்தத்தைத் தவிர்க்க வேறாலதான் சாத்தியமாகுமோ? தனது ஸ்பஷ்டமான (பிரதிபந்தமின்றிய) ஞான நேத்திரத்தால் பிரஹ்மத்தைப் பார்ப்பதை யல்லாமல் மற்றொரு பண்டிதனாலு மடையக்கூடாது. சந்திரனை சுத்தமான தன் நேத்திரத்தினாலன்றி பிறர் பார்த்தலால் தான் பார்க்கக்கூடுமா? பிரஹ்மாத்மைக்ய ஞானத்தாலன்றி சாங்கியம், யோகம், கர்மம், வித்வத்வம் முதலியவைகளாலும் மோக்ஷங் கிடைக்காது. வீணையினது ரூபஸௌந்தர்யமும் தந்தியால் மதுரமாகக் கானஞ்செய்தலும் எப்படி ஜனங்களுக்கு சந்தோஷமாத்திர முண்டாக்குகிறதன்றி சாம்ராஜ்யாதிபத்யந் தருவதில்லையோ அப்படியே மதுரமான வாக்கோடு சாதுர்யமான வசனம், சாஸ்திர வியாக்யான சாமர்த்தியம் முதலிய வித்வான்களது சிரேஷ்டமான வித்வத்வம் போகத்தைக் கொடுக்குமன்றி மோக்ஷத்தைக் கொடாது.

பரதத்துவத்தை யறியாவிட்டால் சாஸ்திரங்கள் படித்தல் பலங்கொடாமையின் நிஷ்பலம். பரதத்வத்தை யறிந்த பின்னர் சாஸ்திரங்கள் படித்தல் வேறு பயனின்மையின் நிஷ்பலமே. ஆதலால், மனமயக்கத்திற் கேதுவான சாஸ்திரஜால மகாரண்யத்தைக் கடந்து தத்துவ ஞானியாகிற குருவால் ஆத்மதத்துவத்தை யநுபவமா யறியவேண்டும். அஞ்ஞான ஸர்ப்பத்தால் கடியுண்டவர்க்கு ஆத்மஞான சஞ்சீவினியை யன்றி வேதங்களாலும் சாஸ்திரங்களாலும் மந்திரங்களாலும் மற்ற மருந்துகளாலும் என்ன பிரயோசனம்? ஔஷதமுட்கொள்ளாது 'மருந்து' எனச் சொல்வதால் தன் ரோகம் போகாதது போல், அபரோக்ஷ அநுபவ ஞானமில்லாமல் 'அஹம் பிரஹ்மாஸ்மி' என வாக்கால் கூறுவதால் தன் பந்தம் நீங்காது. சத்துருக்களை நாசஞ்செய்யாமலும், அகில பூமண்டல சாம்ராஜ்யத்தை யடையாமலும் 'நான் ராஜா' என்று சொல்வதால் எப்படி அரசனாகமாட்டானோ, அப்படியே அநாத்ம திருசியத்தை நாசஞ்செய்யாமலும் ஆத்ம தத்துவத்தை யநுபவமா யறியாமலும் 'பிரஹ்மைவாஹம்' என்னும் வாக்கு மாத்திரத்தால் பிரஹ்ம மாத்ரமாயிருக்கும் முக்தியடைய மாட்டான். எங்ஙனம் பூமியிலுள்ள புதையலொன்று அறிந்த ஆப்தனால் கேட்டு, பூமியைவெட்டி, அதன் மேல் மூடியுள்ள கல்லைநீக்கி வெளியே யெடுத்தலா லடையப்படுமே, சொன்மாத்ரத்தா லடையப்படாதோ, அங்ஙனமே பிரஹ்மத்தையறிந்த குருவினிடத்தில் சொரூபலக்ஷணத்தை சிரவணஞ் செய்து, அதனை மனனம்பண்ணி, நிரந்தர தியானிப்பதா லுண்டாகும் அபரோக்ஷ அநுபவ ஞானத்தால் அடையலாகுமல்லாமல் மாயையால் மறைபட்டுள்ள

ஸ்வஸ்வரூபத்தைத் தர்க்க யுக்திகளா லடையக்கூடாது. ஆகையால் விவேகியானோர் ஸர்வ பிரயத்தனத்தாலும் பவபந்தம் நீங்கி மோக்ஷமடைதற்பொருட்டு, ரோகாதிகளை நீக்குதலிற் போலத் தாங்களே முயற்சிசெய்யவேண்டும்.

சிஷ்யனே! நீ கேட்ட கேள்வியானது உத்தமமாய், சாஸ்திர ஞானிகட்குச் சம்மதமாய், சூத்திர சமானமாய், சூக்ஷ்மார்த்தமுள்ளதாய், மோக்ஷத்தை யபேக்ஷிப்பவரா லறியக்கூடியதா யிருக்கிறது. இதற்கு யான் கூறு முத்தரத்தைச் சாவதான சித்தனாய்க் கேள். அதனால் உடனே பந்த மகன்றுபோம். மோக்ஷ மடைதற்கு அநித்திய வஸ்துக்களில் வைராக்கிய மடைதல் முந்தினதேறது. பின்னர் சமம், தமம், திதிக்ஷை, ஸர்வ கர்மபரித்தியாகம் (உபரதி) எனுமிவை கிரமமாக வரது. அதன் பின், வேதாந்த சிரவணம், பின்னதன் மனனம், அதன் பின்பு இடைவிடாமல் வெகுகாலஞ் செய்யும் பிரஹ்மத் தியானமும் வரது. அந் நிரந்தரத் தியானத்தா லுண்டாகும் நிர்விகற்ப சமாதியால் பெறப்பட்ட அபரோக்ஷ பிரஹ்ம சாக்ஷாத்கார ஞான பலத்தால் விவேகி இவ்விடத்திலேயே மோக்ஷானந்தத்தை யனுபவிக்கின்றான். இதுவே மோக்ஷ சாதனக் கிரமம். நீ யறிய வேண்டிய ஆத்மானாத்ம விவேகத்தை யிப்போது சொல்லுகிறேன். அதனை நன்றாய்க் கேட்டு மனதில் தரித்துக்கொள். இரண்டில் முன்னம் அனாத்மாவைக் கேள்.

மஜ்ஜை (மூளை), அஸ்தி, மேதஸ்(கொழுப்பு), மாமசம், ரத்தம், சர்மம், சுக்கிலம் என்னும் சப்த தாதுக்களாற்று, பாதம், தொடை, மார்பு, புஜம், முதுகு, சிரசு முதலிய அங்க உபாங்கங்களோடு கூடியதாய், நான் எனது எனவே யாவ

ராலு மறியப்பட்டு, மோகத்திற்கு முக்கிய ஸ்தானமாய், பிரத்தியக்ஷமாயிருக்கு மிதுவே ஸ்தூலதேகமென் றறிஞர் கூறுகின்றனர். இந்த ஸ்தூல தேகம் ஆகாசம், வாயு, அக்கினி, அப்பு, பிருதிவி என்னும் சூக்ஷ்ம பூதங்கள் (தன்மாத்திரைகள்) தத்தம் அம்சங்களில் அன்யோன்யம் கலந்து பஞ்சீகரித்ததா லுண்டான ஸ்தூல பூதங்களைத்தா லானது. அவ்வைந்து தன்மாத்திரைகளுமே சப்தாதி பஞ்ச விஷயங்களாயிருந்து விஷய போக்தாக்களான ஜீவர்க்கு சுக சாதனம் போலத் தோன்றும். அஞ்ஞராகின்ற அந்த மூடர் ராகம் (ஆசை) ஆகின்ற பாசத்தால் இவ்விஷயங்களில் கட்டப்படுகின்றோர் உடனே யவர் தங்கள் கர்மம் என்னும் தூதனு விழுக்கப்பட்டவராய், அக்கர்மானுசாரமாக மேலும் கீழும் போக்கு வரத் துடையவராய் மிகவுமலைந்து துக்கிப்பர். இச்சப்தாதி பஞ்ச விஷயங்களில், சப்தத்தால் ஸர்ப்பம் அல்லது மானும், ஸ்பரிசத்தால் யானையும், ரூபத்தால் பதங்கமும், ரசத்தால் மீனும், கந்தத்தால் வண்டும் ஒவ்வொன்றி லாசை வைத்தே உயிர் துறக்குமாயின் இவ்வைந்திலும் ஆசையுள்ள மனுஷ்யன கதி என்னவாகும்? விஷயமானது தன்தோஷத்தால் கிருஷ்ண சர்ப்ப (கருநாக) விஷத்திலுங் கொடியது. என்னெனின், விஷமானது உட்கொண்டவனை மாத்திரங்கொல்லும்; விஷயமோ கண்ணுற் கண்டவனையும், நினைத்தவனையுங் கூட நசிக்கச் செய்கின்றது. எவனொருவன் நீக்கற்கரிய விஷயாசையென்னும் மகாபாசத்தை திடவிராகத்தா லறுத்து அதினின்று விடுபடுகிறானோ அவனே மோக்ஷமடைவனன்றி, அன்னியன் ஷட் சாஸ்திர பண்டிதனாயினும் முக்தி பெறமாட்டான். திட வைராக்கியமின்றிப் பவசாகரத்தைக் கடந்து மோக்ஷதீரஞ் சார யத்தனிக்கும் முமுக்ஷுவின்

கழுத்தை ஆசையாம் முதலை பிடித்து அதி வேகமா யிழுத்துப்போய் க்ஷணத்தில் அபார சமுசார சமுத்திர மத்தியி லமிழ்த்திவிடு மாதலால், எந்த முமுக்ஷு விஷயாசை யென்னும் முதலையை திடவிராக மென்னும் வாளினால் கொல்வனோ அவனே பவக்கடலின் முக்தி தீரத்தைத் தடை யாதுமின்றி யடைவன். நல்ல புத்தியில்லாதவனும் மாறி மாறித் தோன்றும் விஷய மார்க்கத்தில் பிரவேசிப்பவன், மேன்மேலும் நரக மனுபவித்துக் கெட்டே போவான். சுபுத்தி யுள்ளவன் தன் யுக்தியால் குருபோதக மார்க்கமே சென்று நற்கதியே பெறுவன். இது சத்தியம். ஆதலின், உனக்கு மோக்ஷம்பெற விருப்பமிருக்கும் பக்ஷத்தில் விஷயங்களை விஷம்போலு மதிதூரத்தில் தள்ளிவிட்டு, சந்தோஷம், தயை, க்ஷமை, ஆர்ஜவம் (நேர்மார்க்கம்), சாந்தி, தாந்தி முதலாய ஸத்குணங்களை அமிர்தம்போலப் போற்றிக் கைக் கொண்டு தேகாபிமானத்தால் செய்யும் பல காரியங்களையும் விட்டு அவித்தையால் செய்யப்பட்ட பந்தமோக்ஷ (நீக்க)த்திற்கே சாவகாலமும் யத்தனஞ்செய். இந்தேகமோ பாராத்மகமாய் (மண், தீ, நீரு, பஞ்சாதிகட ஆகாயமாய்) இருக்கின்றது. எவன் தன்னை மறந்து தேகத்தைத் தானாக வபிமானித்துப் போஷிக்க எண்ணுகிறானோ அவன் ஆத்மஹந்தா ஆகிறான். சரீர போஷணையில் புத்தியுள்ளவனாய் எவன் ஆத்மாவை அறிய இச்சிக்கின்றானோ அவன் முதலையைக் கட்டையெனப் பிடித்து அதனால் நதி தாண்டச் செல்பவனாவன். தேகாதிகளிலுள்ள மோகமே முமுக்ஷுவுக்குப் பெரிய மிருத்யு. எவனிந்த மோகத்தை வென்றானோ அவனே மோக்ஷபதம் பெறுவானாதலால் அதனை வென்று முனீசுவரர்கள் அவ்விஷ்ணுவின் பரமபத (வியா

பதப் பிராப்தமா) மடைந்தார்களோ, தேக, தார சுதாதிகளிலுள்ள அபிமோகத்தை ஜயித்து நீயுமந்த மோக்ஷபதமடையுக. தோல், மாமிசம், ரத்தம், மேதஸ், மஜ்ஜை, அஸ்திகளோடுங் கூடியதாய், மூத்ர புரீஷ (மல) ங்களால் பூர்ணமாயுள்ள இந்தத் தேகம் மிகவும் நிந்திக்கத்தக்கது. பூர்வஜன்மார்ந்த கர்மானுசாரமாய், பஞ்சீகிருத ஸ்தூல பஞ்ச மகா பூதங்களாலுத்பன்னமான இந்த ஸ்தூல தேகம், கிருகஸ்தனுக்கு கிருகம்போல விஷயபோகங்களை ஆத்மா இருந்தனுபவிக்க ஓர் போகாலயமாம். இதனவஸ்தை ஜாக்ரம எனப்படும். மாலை சந்தன ஸ்திரீயாதி நாநா விசித்திரமா ஸ்தூல போக்கிய பதார்த்தங்களை பாகேந்திரியங்களால் ஆத்மா தானே இத்தேகத்துடன் அத்தியாசத்தால் கூடியனுபவிக்குங் காலம் ஜாக்ரம எனப்படுதலால் இவ்வவஸ்தையிலேயே ஸ்தூல தேக மறியக் கூடியது. இதனாசிரயத்தாலேயே புருஷனுக்கு பாஹ்ய சமுசாரமனைத்தும் வந்ததென்றறி. உத்பவம், பெருத்தல், ஜரை, மரணமாதியித்தேகத்தின் தர்மங்கள், சைசவம், கௌமாரம், யௌவனம், வார்த்தக்ய மிவை இதனவஸ்தா பேதங்கள். வர்ண ஆசிரமாதி நியமமாம். மானம், அவமானாதி யிதன் விசேஷங்களாகும். இத்தூலமே ரோகங்களைத்தற்கும் ஆஸ்பத (இருப்பிட) மாயிருக்கின்றது.

சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, ஜிஹ்வை, கிராணம் இவைகள் சப்தாதி பஞ்ச விஷயங்களை யறிவதால், ஞானேந்திரியங்களாம். வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் இவை வசனாதிக்கிரியைகள் செய்வதால் கர்மேந்திரியங்களாம். அந்தக்கரணம் ஒன்றே ஸங்கல்ப விகற்பாதி விருத்தி

வஸ்துநிச்சய விருத்தி, அபிமான விருத்தி, பதார்த்தானு சந்தான விருத்தி என்னும் தன் விருத்தி பேதத்தால் கிரமமாய் மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என நான்கு பிரகாரமாகும். ஸ்வர்ணம் ஜலம் முதலியன விருத்திபேதத்தால் நானா ரூபமாவது போலப் பிராணன் ஒன்றே தன் விருத்தி பேதத்தால் பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்று ஐந்துவிதமா யிருக்கும். ஆகாசாதி பூத பஞ்சகம், சுரோத்திராதி ஞானேந்திரிய பஞ்சகம், வாக்காதி கர்மேந்திரிய பஞ்சகம், பிராணாதி வாயு பஞ்சகம், மனாதி அந்தக்கரண சதுஷ்டயம், அவித்தை, காமம், கர்மம் இவ் வெட்டையும் புரியஷ்டகம் என்றும் சூக்ஷ்ம தேகமென்றும் கூறுவர். அபஞ்சீகிருத பஞ்ச சூக்ஷ்ம பூதங்களாலானதாய், வாசனையோடுங் கூடிய கர்ம பலமான போகங்களை ஆத்மா அனுபவித்தற்கு சாதனமாயிருக்கும் இந்த லிங்க தேகம் அஞ்ஞானத்தா லுண்டான அநாதி யுபாதி. இதன் அவஸ்தை ஸ்வப்னம். இவ்வவஸ்தையில் மனமே நானாவித ஜாக்கிரத் வாசனையால் கர்த்ரு முதலிய பாவங்களை யடைந்து விளங்கும். அப்பொழுது ஸ்வயம் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஆத்மா, மன மாத்திரத்தை யுபாதியா யடைந்து அதனால் செய்யப்படும் கர்மங்களில் பற்றின்றி அவைக்கெல்லாம் சாக்ஷிமாத்திரமா யிருக்கும். வாச்சி முதலியன தச்சனது தொழிலுக்குக் காரணமாதல் போல, ஞானரூப ஆத்மாவின் ஸர்வ வியாபாரங்கட்கு மிந்த லிங்கதேகம் காரணம். அக்காரணமும் ஆத்மஸந்நிதிமாத்திரத்தாலேயே ஸர்வ கர்மங்களும் செய்வதால் அவ்வாத்மா எப்போதும் விகாரமின்றி யசங்கமாகவே யிருக்கும். சக்ஷுஸின் குணதோஷ வசத்தா லுண்டாகும் அந்த, மந்த, படுத்துவங்கள் (குருடு,

மந்தநிருஷ்டி, நல்லதிருஷ்டி), அங்கனமே பதிர, மூகத்வங்கள் (செவிட்டு, ஊமைத்தன்மைகள்) முதலியன நேத்ர சுரோத்திராதி இந்திரிய தர்மங்களேயன்றி சுத்தமாயுள்ள ஆத்மாவின் தர்மங்களாகா. உச்வாச, நிசுவாசங்கள (மேல் கீழ் போகத வரத்தாயுள்ள சுவாசம்), கொட்டாவி, தும்மலாதி பிராணாதிகளின தர்மங்கள். பசி, தாகம், பிராணன் என்றன் தர்மம அந்தக் கரணமெனனேற சித்தாபாசய பிரகாரத்தோடு சக்ஷுவாதி இந்திரியங்களில் பொருந்தி திடமாக நான் என்றபிமானிக்கும். அதுவே அகங்காரம் அவ்வகங்காரமே கர்த்தா, போக்தா அபிமானியாய் சத்வாதி முக்குணசேர்க்கையால் வரும் அவஸ்தாத்திரயத்தையு மனுபவித்து, அனுகூல விஷயங்களில் சுகத்தையும், பிரதிகூல விஷயங்களில் துக்கத்தையு மடையாநிற்கும். அதலால் சுகதுக்கங்கள் அகங்கார தர்மமன்றி ஸதானந்த ஆத்மாவினதன்று. விஷயங்களெல்லாம் ஆத்மாவின் பொருட்டுப் பிரியமாய்த் தோன்றுவதல்லாமல் சுயமே யுள்ளவாறு பிரியமாகா. உண்மையில் ஆத்மாவே யாவர்க்கும் அத்தியந்த பிரியமாயிருப்பதால் அவ்வாத்மா ஸதானந்த சொரூபம். அதற்கு துக்கம் ஒருசிறிதுமில்லை. இந்திர்விஷய ஆத்மானந்தம சுழுப்தியில் அனைவர்க்கு மனுபவம். இதில் சுருதி, பிரத்தியக்ஷம், ஐதிகம், அனுமானம் இவை பிரமாணங்கள்.

அவ்வியக்தம், அவித்தை, மாயை முதலிய நாமங்களுற்றதாய். திரிகுணாத்மிகை (முக்குண ரூபி) யாய், புத்திமான்களால் தன் காரியங்கொண் டனுமானிக்கப்பட்டதாய், ஸர்வ திருசியங்கட்கும் மேலானதாய்,* ஜகமெல்லா முண்டாக்குவதாய், ஸத்து, அசத்து, சதசத்து, பின்னம்,

அபின்னம், பின்னாபின்னம், சாவயவம், நிரவயவம், சாவயவ நிரவயவம் என்னும் நவப்பிரகாரமு மல்லாமல் அநிர்வசனீய (இன்னதென் றுரைக்கக்கூடாத) சொரூபமாய், அநாதியாய், ரஜ்ஜு ஞானத்தால் ஸர்ப்பப்பிராந்தி நசிப்பதுபோல சுத்தாத்வைத பிரஹ்ம ஞானத்தால நசிப்பதால் மகா அற்புதமான ஸ்ரீ பரமேசுவர (பிரஹ்ம) சக்தியுள்ளது. யாவருமறிவதாயுள்ள தன்காரியத்தால் பிரஸித்தமான அச்சக்தியின் (1) சத்வம், (2) ரஜஸ், (3) தமஸ் என்னும் திரிகுணங்களில், (2) கிரியா ரூபியான ரஜோகுண ரூப விக்ஷேப சக்தியைப்பற்றி சர்வப்பிரவிருத்திகட்கு மேதுவா யிருக்கும். இதனாலேயே ராகாதி, துக்காதிகளான மனோ விகாரங்களெல்லா முண்டாகின்றன. காமம், குரோதம், லோபம், டம்பம், அசூயை, அகங்காரம், ஈர்ஷை, மத்ஸரம் முதலான மனவிகாரங்க ளிதன் தர்மங்கள். இவ்விக்ஷேப சக்தி புருஷர்கட்குப் பிரவிருத்தி யுண்டாகத் தோஷத்தால் பந்த மது. (3) தமோகுண சக்தி ஆவரண சக்தி யென்னப்படும். இதனாலேயே வஸ்து அந்நியதாவா (வேறாய்) விளங்குகின்றது. விக்ஷேப சக்தியைப் பொருந்தின காரணத்தால் இதுவே புருஷனது ஸம்சாரத்திற் காதி காரணம். இவ்வாவரண சக்தியா லாவிருதனான (மூடப்பட்ட) வன். பிராக்ஞனாயினும் பண்டிதனாயினும், சதுரனாயினும், சூக்ஷ்மார்த்த மறிந்தவனாயினும், ஸர்வ வல்லபனாயினும், குரு முதலானோர் ஆத்ம தத்துவத்தை நன்றாய் வெகுவிதமாய் போதித்தாலும் அம்மறைப்பா லதனை யறியாதவனாய், அஞ்ஞானப் பிராந்தியாலாரோபிதமான வஸ்துக்களை நல்லதாயெண்ணி அவற்றையே யடைகின்றான். மகா சாமர்த்தியமுள்ளதாய், எவராலும்

நிற்கச் சக்தியாயிருக்கும் இத்தமோகுண ஆவரண சக்தியுடன் கூடியவனை, அபாவனை (ஒன்றுமறியாமை), அசம்பாவனை (சொல்லினும் அறியாதிருத்தல்), சம்சயபாவனை (சந்தேகம்), விபரீதபாவனை (மாறாகவறிதல்) என்னும் இவைவிட்டு நீங்குகிறதில்லை. அவனை விக்ஷேபசக்தியும் ஓயாமலிழுத்தலைத்து வைக்கின்றது. அஞ்ஞானம், ஆலஸ்யம், ஜடத்துவம், நித்திரை, பிரமாதம் (செய்வன தவிர்தல்), மூடத்துவம், இவை தமோகுண விகாரங்கள். இவற்றை யடைந்தவன் ஒன்றுங் கிரகிக்கு மறியாதவனாய், நித்திரை புரிபவன்போலும், ஸ்தம்பம்போலும் மூடனாயிருக்கிறான். இனி (1) சத்துவ குணம் ஜலம்போல் மிக பரிசுத்தமாயினும் ரஜஸ், தமோகுணங்களோடு சேர்ந்ததால், 1 மலினமாகி பந்தஹேதுவாம். ஆத்மா இதில் பிரதிபிம்பித்து ஜகமனைத்தையுஞ் சூரியன் போலப் பிரகாசிப்பிக்கும். அமானித்வ (மானமின்மை) முதலியன, யம நியமாதி, சிரத்தை, பக்தி, முமுக்ஷுத்வம், தெய்வ சம்பத்தி, அசத்துக்களினீக்கம் இவை புருஷயத்தனத்தால் பூர்வம்போல ரஜஸ், தமஸதிகமின்றிய, 2. மிசிர சத்துவத்தின் காரியங்கள், 3 விசுத்த சத்துவத்தின் மிகுந்த தெளிவினால், ஸ்வாத்மானுபூதி, பரமசாந்தி, நித்யதிருப்தி, அதிசந்தோஷம், சதா ஆனந்தமடைதற் கேதுவான பிரஹ்மநிஷ்டை இவை விசுத்தியாம். திரிகுணங்களோடுங் கூடின இந்த அவ்வியக்த சக்தியே ஆத்மாவின் காரணதேகம். சர்வ இந்திரிய, மனவிருத்திகள் லீனமான சுழுப்தி இதனவஸ்தை. இவ்வவஸ்தையில் 'ஒன்றுமறியாது சுகமாய்த் தூங்கினேன்' என்னும் உலகானுபவத்தால் எல்லாவித ஞானமும் சாந்தமாகி, மனம் காரணாத்மகமாயிருந்தே பிரஹ்மானந்தத்தை யனுபவிக்கின்றது. தேகம், இந்திரியம், மனம்,

படுகின்றனவோ, எதனால் உயிரும், வாக்கும், மற்றவையும் சரிக் (அசை) கின்றனவோ அந்த அந்தராத்மா புராண புருஷனாய், நிரந்தரமாய், அகண்ட, பரிபூர்ணமாய், ஆனந்த சொரூபமாய், ஏகமாய், ஸத்ரூபமாய், பிரதி தேகத்திலும சாக்ஷி (ஞான) மாத்திரமாயிருக்கிறது. இத்தேகத்தின்கண், ஹிருதய குகையில் அவ்வியாகிருத (சூக்ஷ்ம, வியாபகத்வத்தால் வெளிப்பட்டுத் தோற்றாத) ஆகாசத்தைப்போலப் பிரகாசிக்கின்ற பரிசுத்த ஆத்மா ஆகாசத்தில் சூரியனைப் போலத் தன் தேஜஸால் இவ்வுலகைப் பிரகாசிப்பிக்கின்றது. மன, அகங்காரங்களின் விகாரங்களையும், தேக, இந்திரியப் பிராணாதிகளின் செயல்களையு மறிவதாய், தப்தாயப் பிண்டத்தில் அக்கினிபோல அவைகளில் அனுஸ்யூதமா யிருப்பினும் இது ஒன்றைச் செய்கிறதுமில்லை; ஒரு விகாரமடைகிறதுமில்லை. இவ்வாத்மா ஜநியாது, மரியாது. பெருகாது, இளைகாது, வேறு விகாரங்களையுமுறாது. கடம் நசிக்கினும் நசியாத கடாகாசம்போல இத்தேகம் மரிக்கினும் மரணமுறாத நித்திய ஸ்வரூபம். பிரகிருதி (காரணமாயை), விகிருதி (அதன் காரியங்) கட்கு விலக்ஷணமாய், சுத்த ஞான சொரூபமாய், சத்து, அசத்துக்களைப் பிரகாசிப்பித்து நிர்விசேஷமாய், ஜாக்கிராதி அவஸ்தைகளில் புத்திக்கு சாக்ஷியாய் இருந்து 'அஹம், அஹம்' எனவே நித்தியாபரோக்ஷமாய்ப் பிரகாசிக்கும் பரமாத்மாவை ஏகாக்கிர சித்தத்தால் 'இந்த நான் பிரஹ்மம்' என்று அனுபவமாயறி. இங்ஙனம் புத்திப் பிரஸாதத்தால் உன்னாத்மாவை யுன்னிலேயே நீயுணர்ந்ததனால் ஜனனமரணத் தரங்கங்களுள்ள அபார சமசார சாகரத்தைக் கடந்து கிருதார்த்தனாய்ப் பிரஹ்ம சொரூப மாத்திரமா யிருக்கக்கடவாய்.

அனாத்மாவில் (தானல்லாத் தேகாதிகளில்) அஹம் (நான்) எனும் புத்தியே சர்வானர்த்த ஹேதுவான பந்தம். இப்பந்தம் புருஷனுக்கு ஜனன மரணங்கொடுக்குங் காரணமாய் அஞ்ஞானத்தால் வந்தது இந்த அஞ்ஞானத்தால் அசத்தியமான இத்தேகாதிகளை சத்தியமாயெண்ணி இவ்விலாத்மபுத்திசெய்து கோசகாரப்புழு (பட்டுப்பூச்சி) வாய்நூலால் தன்னைக்காத்து நசிப்பதுபோல சப்தாதி விஷயங்களாவிதனைப் போஷித்து நாசமுறுகின்றனர். ஆவரணத்தால் மூடப்பட்டவர்க்கெல்லாம் விவேகமின்மையின், ஸர்ப்பத்தில் ரஜ்ஜு புத்திபோல வஸ்து வல்லாததில் வஸ்து எனும் புத்தி தோற்றல் சுபாவமாதலால், அகண்டமாய், நித்தியமாய், அத்வைதமாய், தன் நிர்மலஞான தேஜஸால் சுயம்பிரகாசித்துக் கொண்டிருக்கும் அனந்த வைபவமுள்ள ஆத்மாவை சூரியனை ராகு மறைத்தல்போலவே தமோமயமான இவ்வாவரணசக்தி மறைக்கவும், புருஷன் தன் சொரூப ஞானத்தை மறந்து, மோகமா முதலையால் விழுங்கப் பட்டவனாய். அம்மோகத்தால் தானல்லாத சரீரத்தைத் தானாக எண்ணிக் காமக் குரோதாதிகளுடன்கூடி புத்தி கெட்டு அப்புத்தியினவஸ்தைகளனைத்தையும் தன்னதாக அபிமானித்து அதனால் விஷய விஷம் நிரம்பிய அபார சம்சார சமுத்திரத்தில் அமிழ்ந்தும் எழுந்தும் ஓர் கதியின்றி பிரமிக்கும்படி ரஜோகுண விக்ஷேப சக்தி மகத்தான துன்பஞ் செய்துவைக்கின்றது. சூரியனது கிரணத்தாலுண்டான மேகபங்திகள் அச்சூரியனை மறைத்துப் படர்ந்து விருத்தியாதல் போல, ஆத்மாவில் அஞ்ஞானத்தா லுண்டான அகங்கார பந்தம் அவ்வாத்மாவை மறைத்துத் தானும் விருத்தியாகின்றது. மழைக் காலத்தில் மேகங்

களால் சூரியன் மறைபட்ட தினத்தில் பனியும் குளிர்காற்று மதிகமாய் ஜனங்கட்குத் துக்கந் தருவதுபோல, தமோ குண ஆவரணசக்தி ஆத்மாவை மறைக்கும்போது ரஜோ குண விக்ஷேபசக்தி அவ்வஞ்ஞானியை மோகத்தால் நானல்லாத் தேகந் தானாக மயங்கச் செய்து நானாவித துக்கங்களால் மிகவுந் துன்புறச் செய்வதால் இவ்விரண்டு சக்திகளாலுமே புருஷனுக்குப் பந்தம் வந்தடைந்ததாகும். இச் சம்சார விருக்ஷத்திற்குத் தமஸ் (ஆவரணம்) பீஜம்: தேகாத்மபுத்தி அங்குரம்: ராகம் தளிர்: கர்மம் ஜலம்: தேகம் அடிக்கட்டை: உயிர்கள் சாகைகள்: இந்திரியங்கள் அவற்றின் நுனிகள்: விஷயங்கள் புஷ்பங்கள்: நானாகர்மத்தாலுண்டாம் நானாவித துக்கம் பழம்: அம்மரத்திலுள்ள ஜீவன் இதனை பக்ஷிக்கும் பக்ஷி. அஞ்ஞானத்தா லுண்டாம் ஜீவர்க்கு ஜன்ம, மரண, ஜரா துக்காதிகளை மேன்மேலுண்டாக்கும் இந்த அநாத்ம சம்சாரபந்தம் உற்பத்தியின்றிய அநாதியே ஆயினும், சுருதியைப் பிரமாணமென நம்பி, அதனாற் கூறப்படும் ஸ்வதர்மங்களை நிஷ்காமமா யனுஷ்டிக்குமதனால் உண்டாகு மந்தக்கரண சுத்தியோடு நிரந்தரம்செய்யும் தியானத்தால் மாசின்மையின்றித் தீட்டப்பட்ட ஆத்மாபரோக்ஷ ஞான மென்னும் வாளினால் சமூலம் நாசமாம். அதன்றி மற்ற அஸ்திர, சஸ்திரங்களாலும், வாயு, அக்கினிகளாலும் அதனை சேதிக்க சக்தியமாகாது.

ஆத்மா, தன்னஞ்ஞான சக்தியின் காரியமான அன்னமயாதி பஞ்ச கோசங்களால் மூடப்பட்டு, பாசிப் படலத்தால் மூடப்பட்ட வாபிஜலம்போல சுத்தமாய்த்* தோற்றவில்லை. ஜலத்தினின்றும் அப்பாசிக் கொத்தினைத் தள்ளுநும்

போது பரிசுத்தமாய், தாக தாபங்களை நீக்கிப் புருஷனுக்குப் பரம சௌக்கிய முண்டாக்கும் அந்த ஜலம்போல, சூக்ஷ்ம புத்தியால் ஆத்மாவினின்றும் திருசியப் பஞ்சகோசங்களை நேதி, நேதி (இதல்ல) எனவே பிரித்துத் தள்ளும அபவாதத்தால் முஞ்சம்புல்லின் மத்தியில் இஷீகை (தண்டு) போல அந்தத் தேகாதி திருசிய வர்க்கங்கட்கு விலக்ஷணமாய், பிரத்தியக்கா (அந்தரமா)ய், பரிசுத்தமாய், ஏகரஸமாய், அசங்கமாய், அக்கிரியமாய், சதானந்த சொரூபமாய், சுயம்பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஆத்மாவை யறிந்து, பின் ரஜ்ஜுவில் கற்பித சர்ப்பம ரஜ்ஜுவே யாதல்போல ஆத்மாவில் கற்பிதமான அத்திருசிய வர்க்கங்களும் ஆத்மாவே யெனப் பிரவிலாபித்து ஆத்மா மாத்திரமாய் எவனிருக்கின்றானோ அவனே முக்தன். ஆதலால் விவேகி, தன் பந்த மோக்ஷத்தின் பொருட்டு ஆத்மானாத்ம விவேசனம செய்யவேண்டும். அதனால் சச்சிதானந்த சொரூபமான தன்னை யறிந்து ஆனந்த மடைகின்றனன். அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் பஞ்சகோசங்களாவன:—

அன்னத்தா லுண்டாய், அன்ன முண்பதால் விருத்தியாய், அன்னமின்றேல் நாசமுறு மிந்த ஸ்தூல தேகம் அன்னமய கோசம். தோல், ரத்தம், மாமிசம், மேதஸ், அஸ்தி, மலம், மூத்திரம் இவைகள் கூடி மிகவும் அசங்கியமாய், முன்னும் பின்னுமின்றி மத்தியத்தில் மாத்திரந் தோன்றி, க்ஷணத்துக்கு க்ஷணம் விகாரமுற்று, ஓர் நியமமு மில்லாமல் கடம்போல் திருசியமாய், ஜடமாய், நாறுவாய், நியம்யமாய் (ஏவப்படத்தக்கதாய்) இருக்குந் தேகம்

சுபாவத்திலேயே இதற்கு விலக்ஷணமாய், ஏகமாய், அங்கங்கள் (பாணி, பாதாதி) நசிக்கினும் அவ்வவ சக்திகள் நாசமாகாது ஜீவித்திருப்பதுபோல அஸ்த, பாதாதி அவயவாகாரமான சரீரம் நசிக்கினும் நாசமுறாத நித்தியமாய், பரிசுத்தமாய், தேகம், ஷட்பாவ விகாரங்களான அதன் தாமம், கர்மம், அவஸ்தை யிவற்றை சாக்ஷிமாத்திரமா யிருந்து சுயமறிந்துகொண்டு நியாமகமா (ஏவுகிறதா)யிருக்கும் ஆத்மாவாதல் எங்ஙனம்? ஒருபோது மாத்மாவாகாது. ஜடனை மூடன் த்வக்கு, மாமச, அஸ்தி, மல, மூத்திர ராசியான தேகமே அகமென நினைப்பன். சிறிது விவேகமுள்ள கர்மஞானி, தேகம், ஜீவன் இரண்டையுங்கூட்டி நானென்றெண்ணுவன். விசாரனைப், திருடமான விவேக ஞானமுள்ள மகாத்மா இந்த விலக்ஷணமாய்த் தன்மயமாகவே யிருக்கும் பரமாத்ம பிரஹ்ம சொரூபமாகவே தன்னை எப்போதுமறிவான். தேகாத்ம புத்தியே மனுஷ்யர்க்கு ஜன்மாதி துக்கபீஜமாதலால், உன் சாயாசரீரம், பிரதிபிம்பதேகம், மனோராஜ்யவுடல், சொப்பனவுடம்பு இவைகளில் ஆத்மபுத்தி வைக்காததுபோல தோல், மாமிச, எலும்பாதி விகாரமான இத்தூல தேகத்திலும் ஆத்மபுத்தி சிறிதும் வையாது பிரயத்னத்தால் அதனை நீக்கி, சர்வாத்மக, சச்சிதானந்தகன, நிர்விகற்ப பிரஹ்மத்தில் ஆத்மபுத்தியை வைத்ததால் மனதை நாசஞ்செய் பரம சாந்தி பெறுவாயாக. பின்னை புனக்குப பவமேயில்லை. வேதாந்தார்த்தங்களை நன்றாயறிந்து வித்வானாயினும் பிரமையினால் அசத்தான தேகாதிகளில் அகம் புத்தியை எதுவரை விடமாட்டானோ அது பரியந்தமவனுக்கு மோக்ஷம் என்னும் வார்த்தையுங் கூடியில்லை.

